*Government Servants' Conduct Rules.*

* 6 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Madras Civil Services Joint Council has recommended to the Government to amend the Government Servants' Conduct Rules ; and

(*b*) if so, in what respects?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI : அரசியல் சட்டப் பிரகாரம் கூட்டம் கூடுவதற்கும், சங்கங்கள் அமைத்து அவைகளில் சேருவதற்கும் உரிமை இருக்கும்போது, என். ஜீ. ஒ-க்கள் அந்த உரிமையைப் பயன்படுத்திக் கொள்வதை ஏன் தடைசெய்யவேண்டும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்.ஜீ.ஒ-க்கள் கூட்டம் கூடுவதை நாங்கள் தடைசெய்யவில்லை. அவர்கள் கூட்டம் கூடிப் பேசுகிறார்கள். சங்கம் அமைத்து அதில் சேருகிறார்கள். இதையும் தடை செய்யவில்லை.

*Personal files for N.G.Os.*

* 7 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Madras Civil Services Joint Council has recommended to the Government the abolition of the system of maintenance of personal files for Non-Gazetted officers?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI N. K. PALANISAMI : மேல் அதிகாரிகளின் 'விம்ஸ் அண்ட் பான்சீஸ்' படி தான் 'ப்ரொமோஷன்ஸ்' கொடுக்கப்படுகின்றன. ஆகவே ஒருவருடைய தகுதியையும் (மெரிட்), ஒருவர் எவ்வளவு தவறுகள் செய்திருக்கிறார் என்பதையும் பார்த்து, அவருக்கு 'ப்ரொமோஷன்' கொடுப்பதற்கு என்ன கஷ்டம் இருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM. : ஒருவருடைய, மெரிட்ஐ எப்படி நிர்ணயிப்பது என்பது தான் இப்போதுள்ள பிரச்னை. மெரிட்டை நிர்ணயிப்பதற்குத்தான் 'பெர்ஸனல் பைல்ஸ்' இருக்கின்றன. உத்தியோகஸ்தர்களைப் பற்றி 'பெர்ஸனல் பைல்ஸ்'-ல் பாதகமாக ஏதாவது எழுதப்படுமானால் அது அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டு, அவர்களுடைய 'எக்ஸ்ப்ளனேஷன்ஸ்' பெறப்படுகின்றன. பெர்ஸனல் பைல்களில் எழுதப் பட்டிருப்பது, உத்தியோகஸ்தர் கொடுத்திருக்கும் எக்ஸ்ப்ளனேஷன் ஆகிய இரண்டையும் கவனித்துத் தான் ப்ரொமோஷன் கொடுக்கப்படுகிறது. ஆகவே பெர்ஸனல் பைல்கள் இல்லாவிட்டால் உத்தியோகஸ்தர்களின் தரத்தையே நிர்ணயிக்க முடியாது.

SRI K. ANBAZHAGAN : கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர் களின் தனிப்பட்ட ஏடுகளில் சில காரணங்களினால் தனிப்பட்ட மாறுபாடு கொண்டு அதிகாரிகள் அவர்களைப்பற்றி குறிப்பிடும் குற்றங்கள் மேலதிகாரி களால் உடனுக்குடன் கவனிக்கப்பட்டு நீக்கப்படுகின்றனவா ?